# சதுர்த்தம்

வேதத்தின் ஞான காண்டங்களாகிய மாண்டுக்யோப நிஷத்தில் "ப்ரபஞ் சோமசமம் சாந்தம் சிவமத்வைதம் **சதுர்த்தம்** மந்யந்தே" எனவும்,

நிருசிம்மபூர்வதாபிக்யுப நிஷத்தில் "ப்ரபஞ்சோப சமம். சாந்தம் சிலமத்வைதம் **சதுர்த்தம்** மந்யந்தே" எனவும்,

நாரத பரிவ்ராஜ கோபநிஷத்தில் "ப்ரபஞ்சோப சமம்சிவம் சாந்த மத்வைதம் **சதுர்த்தம்** மந்யந்தே' எனவும்,

ராமோதரதாபி நீயோட நிஷத்தில் "ப்ரத்யயஸாரம் ப்ரபஞ்சோப சமம்சாந்தம் சிவமத்வைதம் **சதுர்த்தம்** மந்யந்தே' எனவும்,

பஸ்மஜாபாலோப நிஷத்தில் "அத்வைதம் **சதுர்த்தம்** ப்ரம்ம விஷ்ணுருத்தாதி தமோ மாசாஸ்யம் பகவந்தக் சிவம்' எனவும்,

வரும் வசனங்களில் நான்காவது தெய்வத்தை விளக்கு நிமித்தம் **"சதுர்த்தம்"** எனும் வாக்கியத்தோடு வெளிப்பட்டு விளங்குகின்றது.

அன்றியும்! திரிபுராதாபிக்யுப நிஷத்தில் "சதாசிவோட்சரம்" எனலால், அட்சரமாவார் சிவம் என வேற்பட்டு, பரப்ரம்மோப நிஷத்தில் "ஜாகரி தேப்ரம்மா ஸ்வப்நே விஷ்ணுஸ் சுஷுப் தௌருத்ரஸ் துரீயமட்சரம்" என்றதனால் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யெலும் அவஸ்தா திரயங்களுக்குரிய பிரமன் விண்டு ருத்ரன் என்னும் முவர்க்கு மேலான துரீயம் (சதுர்த்தம்) சிவமெனவும், நிருசிம்மோத்தர தாபிக்யுப நிஷத்தில்

"அகாரம் பிரஹ்மாணம்" "உகாரம்விஷ்ணும்" "மகாரம்ருத்ரம்" ஓங்காரம் (சதுர்த்தம்) ஸர்வேச்வரம்" என்றதனாலும்,

அதர்வ சிகோபநிஷத்தில் "ப்ரம்ம விஷ்ணுருத்ரேந்த்ராஸ்தேஸம் ப்ர ஸு யந்தேஸர்வாணி சேந்தரியாணி ஸஹபூதைர் நகாரணம் காரணா நாம்த்யாதாகாரணந்துத்யே யஸ்ஸர்வைச்வர்யஸம்பந்நஸ்ஸர்வேசவரச் (சதுர்த்தம்) சம்புராகாசமத்யே" எனவும் வரும் வடமொழி வேதங்களிலும்; திருக்கடைக்காப்பில்

"ஒருருவாயினை .................. படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை" எனவும்,

தேவாரத்தில்

"ஆதியும் மரனாயயன் மாலுமாய்ப், பாதி பெண்ணுருவாயபரமன்' எனவும், திருப்பாட்டில்

"மூவராயுமிருவராயு முதல்வன வனேயாம்" எனவும்,

திருவாசகத்தில்

"மூவர்கோனாய் நின்ற முதல்வன்" "மூவரும் முப்பத்து மூவருமற்றொழிந்த தேவருங்காணாச் சிவபெருமான்" மூவராலுமறியொண முதலாயவானந்த மூர்த்தியான் மூவரறியாச் சீந்துரச்சேவடி பானை" எனவும் வரும் தமிழ்வேதங்களிலும் திரிமூரதிகட்கும் மேலாய நான்காவது (சதுர்த்தம்) தெய்வம் சிவமெனமுடிவு காண்க.

மாண்டூக்யோபநிஷத்தில் ஸ்ரீ இராமாநுஜர் என்பவர் அதனிலுள்ள சிவமென்பதற்கு மங்களஸ்வரூபமென்றும், சதுர்த்தமென்பதற்குச் சங்கர்ஷண பிரத்யும் அதிருத்தரெனும் மூவர்க்கும் லயஸ்தானமான வாசுதேவனென்றும் பொருள் கொண்டமை பொருத்தமோ எனின், மேற்காட்டிய உபநிடதங்களிலுள்ள வசனங்கடோறு மிருக்குந் தெய்வப்பெயர் " சிவம் " என்றேயிருத்தலினாலும், மேலுதகாத்த அதர்வசி கோப நிஷத்வசனத்தில் பிரமன் விண்டு ருத்திரன் இந்திரனாகிய இவரெல்லாம் படைக்கப்படுகின்றனர். இந்திரியங்ளெல்லாம் பூதங்களோடு பிறப்பிக்கப்படுகின்றன. ஆகலின் அவர்களும் அவைகளும் காரணமில்லை. தியாதாவாகிய அவர்களாலே தியானிக்கப்படும் தியேயனெனும் சருவைச்சுவரிய சம்பன்னனும், சருவே சுவரனும், சம்பு சத்த வாச்சியனும், பரமாகாச மத்தியத்தி லிருப்பவனுமான சிவனே காமணன் எனப் பிரகாசித்தலின்லும் ஸ்ரீ இராமாநுஜர் என்பவர் கொள்கை மறுக்கப்பட்டதென்க. அன்றியும் நாலாயிர பிரபந்தத்தில், "மூவரிலெங்கண் மூர்த்தியிவனென முனிவரோடு தேவர் வந்திறைஞ்சு நாங் கூர்த் திருமணிக் கூடத்தானே" "மூவரிலொரு வராய வொருவனையுலகங் கொண்ட கோவினை" எனத் திருமங்கை மன்னரும், "முதலாவார் மூவரேயம் மூவருள்ளு முதலாவான் முரிநீர்வண்ணன" எனப் பொய்கையாருங் கூறியிருத்தலின் ஆழ்வார்களும் தங்கள் விண்டு சதுர்த்தமல்லரென உப்பியவாறாயிற்று. இவை முதலிய காரணங்களால் **சிவமே சதுர்த்த** மென்பது வச்சிரலேபமாம்.

சுபம்.

மணவழகு.

சித்தாந்தம் - 1912 ஹூ - செப்டம்பர் மீ